# 72

## எவன் பிறந்திருக்கின்றானோ?

தீபாவளியன்று காலை கனகம் மாடி ஜன்னலில் உட்கார்ந்து தெருவின் இரு சிறகுகளிலும் நடக்கும் மகிழ்ச்சி மகோத்ஸவத்தைக் கண்டு ஏக்கம் தட்டிப் போனவளாய் மெய்மறந்திருந்தாள்.

எதிர் வீட்டு ஸரோஜாவின் கணவன் மயில் கண் வேஷ்டி அங்க வஸ்திரங்களின் சரிகை பகட்டாகத் தெரியும் படி தரித்துக்கொண்டு கிராப் தலையும் கடுக்கன் காதுமாக கைக் கடியாரத்தை நிமிஷத்திற்கு ஒரு முறை பார்த்துக் கொண்டு வாசல் திண்ணையில் ஈஸிசேரில் சாய்ந்து கொண்டிருந்தான். மூக்குக் கண்ணாடியை அடிக்கடி எடுத்துத் துடைத்துப் போடும் ஜாடையாக எழுந்து எழுந்து உட்கார்ந்து ரேழிப்புறம் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தான்.

கனகம் ஒரு தடவைதான் அவன் உட்கார்ந்திருந்ததைக் கவனித்தாள். பிறகு தெருவைப் பார்த்துக் கொண்டிருந்தாளே தவிர, அவள் எண்ணங்கள் எப்படியோ எங்கெங்கோ ஓடிக்கொண்டிருந்தன.

பிறகு தெருவில் நடந்த தீபாவளி வெடி வேடிக்கைகளும், கூச்சல் களும் அவள் உலகத்தில் நடைபெறவில்லை.

ஆனி மாதமும் பிறந்துவிட்டது; கல்யாண முகூர்த்தங்கள் ஒவ்வொன் றாக அநேகமாகக் கழிந்துவிட்டன.

'ஸீஸனே' முடிகிற சமயம்; கனகத்தின் கலியாணம் முடியவில்லை.

ஊரெல்லாம் பந்தல்கள்; தெருத் தெருவாகக் கொட்டு முழக்குகள், ஊர்வலங்கள், மாப்பிள்ளை அழைப்புகள், காசி யாத்திரைகள். கனகத்தின் கையைப் பிடிக்கும் பிரமசாரி மட்டும் காசி யாத்திரை வரவில்லை; அந்த மாப்பிள்ளையை அழைக்கும் முகூர்த்தம் மட்டும் இன்னும் வரவில்லை. அவன் எவன்? எங்கிருந்தான்? எங்கோ பிறந்துதான் இருக்கிறான்? இடம் தெரியவில்லை.

கனகம் அன்றும் மாடி ஜன்னலில்தான் உட்கார்ந்து தெரு வழியே போகும் ஊர்வலங்களைப் பார்த்தாள். அவள் கையைப் பிடிக்கப்

*கலாமோகினி, நவம்பர்-1943*

போகும் கணவன், அவள் பக்கத்தில் மஞ்சள் வேஷ்டியுடன் உட்கார்ந்து மந்திரம் சொல்லப் போகிறவன், அவள் கழுத்தில் காலாந்திரத்திற்கும் கெட்டியாக நிற்கும் மாங்கலியத்தைக் கட்டப்போகும் மணமகன்– இன்னும் ஒரு மாதத்திற்குள் எங்கிருந்து எழுந்தோடி வரப் போகிறான்.

தெரு வழியே போன ஒவ்வொரு மாப்பிள்ளை முகத்தையும் கவனித்தாள். கிராப்பும், கண்ணாடியுமாக எதிர் வீட்டு ஸரோஜாவின் பக்கத்தில் காரில் உட்கார்ந்துகொண்டு சென்ற அந்தப் பட்டணத்து மாப்பிள்ளை தன் பக்கத்தில் உட்கார்ந்திருக்கக்கூடும். அவள் பக்கத்தில் இப்போது உட்கார்ந்திருக்கிறானே–அந்த மாதிரி!

கட்டுக் குடுமியும் கடுக்கனுமாக கீழத் தெரு காமுவுடன் 'ஸாரட்டில்' உட்கார்ந்துகொண்டு போன உடையாளூர் மிராசுதார் பிள்ளை கூட தன் புருஷனாக வந்திருக்கலாம். ஏன் கூடாது? திடீரென்று தெய்வாதீனமாகத் தீர்மானமானதுதானே அந்தக் கலியாணம்! ஏன், எந்தக் கலியாணம் தான் அந்தமாதிரி ஏற்படவில்லை?

ஸரோஜா எந்தவிதத்தில் கனகத்தைக் காட்டிலும் உயர்வு? அழகிலா? இல்லை. வயதில் கனகத்தை காட்டிலும் பெரியவள். அவள் தகப்பனார் பெரிய வக்கீல். ஸரோஜாவின் அழகில் இருந்த குறைகளை பணம் நீக்கிவிட்டது. காமுதான் என்ன? கனகத்தின் வயதுதான் – பதினெட்டு. கருப்பு – ஸரோஜாவாவது சிவப்பாக இருந்தாள். உடையாளூர் மிராசுதார் பிள்ளை மனதைக் கவரும்படி என்ன இருந்தது? பெற்றோர்களின் அந்தஸ்து.

கனகத்துக்கு அதெல்லாம் தான் இல்லை. தகப்பனார் பெரிய வக்கீலில்லை; தாயார் பெரிய மிராசுதார் தங்கை இல்லை. ராஜாராமய்யர் நூறு ரூபாய் சம்பளம் கொண்ட சர்க்கார் உத்தியோகஸ்தர்; அவ்வளவு தான்; தாயார் மற்றொரு சர்க்கார் உத்தியோகஸ்தர் பெண். தாயாரும் பெண்ணும் நல்ல அழகு. படித்தவர்கள், நன்றாகப் பாடுகிறவர்கள். படிப்பும், பாட்டும், அழகும் கேட்பாரற்று ஜன்னலில் உட்கார்ந்து ஒடுங்கிக்கொண்டிருக்க, எதெதையோ ஏற்றிக் கூட வைத்துக் கொண்டு போனார்கள் மாப்பிள்ளைகள்!

காமுவின் முகத்தைக் கடைக் கண்ணால் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான் அவள் கணவன். பௌடர் அப்பியிருந்த அவள் கருப்பு முகத்தில் வைரங்கள் ஜொலித்தன. வியர்வை பெருகி பௌடரைச் சில இடங்களில் போக்கி இருந்தது. 'நமக்கும் ஒரு முகூர்த்தம் என்று நிச்சயமாகி, புருஷன் என்று ஒருவன் வந்து கழுத்தில் தாலியைக் கட்டிவிட்டான், அப்பாடா! இனிமேல் எது எப்படி வேண்டுமானாலும் நடக்கட்டும்!' என்றது போன்ற ஒரு திருப்தியும் ஆறுதலும் அப்பொழுது அவள் உள்ளத்தில் நிரம்பி இருந்தன. புருஷனைப் பார்த்து மகிழ வேண்டும் என்றோ கலியாண தடபுடல்களை அனுபவிக்கவேண்டும்

என்றோகூட அவள் எண்ணவில்லை. 'கலியாணமாகிவிட்டது! கலியாணமாகிவிட்டது!' என்ற உள்ளத்தின் ஒலிதான் இடைவிடாமல் கிளம்பிக்கொண்டிருந்தது. அதைக் கேட்டுக் கேட்டு நிம்மதி அடைந்தாள். திருட்டுத் தனமாகத் தாலியைத் தொட்டுப் பார்த்து நிச்சயம் செய்து கொண்டாள்.

'இனிமேல் நானும் உயிர் வாழலாம், வெளியே போகலாம், குதூகல மாக வாழ்க்கையில் இன்பங்களை அனுபவிக்கலாம். இதோ என் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறவர் எனக்கு அந்த விடுதலை கொடுத்து விட்டார். இனிமேல் என்ன ஆனால் என்ன?'

கனகம் மாடி ஜன்னலில் இருந்து காமுவின் முகத்தைப் பார்த்தாள். மூன்று நாள் முன்புவரை கனகத்தைப்போல காமுவும் ஏக்க உருவமாக இடிந்து உட்கார்ந்திருந்தவள் தான். இப்பொழுது வெற்றி ஊர்வலம் வருகிறாள். 'நான் இனிமேல் ஒரு பெண்–சமூகம் இனிமேல் என்னைத் தலையிலடித்து உட்காரவைக்க முடியாது. விடுதலை, விடுதலை!' என்று அவள் கூச்சலிடுவதுபோலிருந்தது கனகத்துக்கு.

'காமு, நீ பாஸ் செய்துவிட்டாய்! உனக்கு எப்படியோ மார்க்கு கிடைத்துவிட்டது. நான்...நான்...' என்று கனகம் எண்ணினபொழுது அவள் உள்ளம் வெடித்துவிடும்போல் ஆகிவிட்டது. எழுந்து கண்ணாடி யின் முன் போய் நின்று தன் உருவத்தைப் பார்த்தாள்.

'எதற்காக வாட்ட சாட்டமான இந்த உயரம்? எதற்காகத் தங்க ரேக்கு போன்ற இந்தச் சாயல்? இந்த மேனி எதற்காகத்தான் இப்படி நாளுக்கு நாள் மினுமினுப்பு கொள்ளுகிறது. இந்த முகத்தில் நிறமும் களையும் ஏன் இப்படி ஏறுகின்றன? இந்தக் கண்களும் வாயும்–சீ! வெட்க மில்லாமல் இப்படி...?' அதற்குமேல் அவள் நெஞ்சம் கூட அவற்றின் மலர்ச்சியை எடுத்துக்கூற முடியவில்லை. சாட்டைபோன்ற பின்னலை எடுத்து கண்ணாடியில் தெரிந்த முகத்தை ஓங்கி அடித்தாள். கோபத் துடன் திரும்பி ஜன்னலில் வந்து உட்கார்ந்தாள்.

'இதோ இருக்கிறது அழகு, யாருக்கு வேண்டும்?' என்று கேட்பது போல, கடைசியில் பார்வைக்கு வைத்திருக்கும் சாமான்போல, உட்கார்ந்திருந்தாள். கடைத் தெருவில் போகும் யுவர்கள் பார்த்தார்கள். கைப்பற்றிக்கொள்ள இஷ்டப்பட்டார்கள்.

'கலியாணம் செய்துகொள்!' என்றால் விழுந்தடித்து ஓடினார்கள்.

'ஏண்டி! கனகம், அரை நாழியாகக் கூப்பிடுகிறேனே, காதில் பட வில்லையா?' என்று மாடிப்படியின் அடியிலிருந்து அவள் தாயார் கூப்பிட்டாள்.

கனகம் நினைவு பெற்று, 'ஏதுக்கு?' என்று வெகு வெறுப்புடன் சீறி விழுந்தாள்.

அப்பொழுது அவள் குரல் காதில் பட்டதும், கீழே எதிர் வீட்டுத்

திண்ணையில் இருந்த மாப்பிள்ளை தானும் ஒரு கனைப்புக் கனைத்து விட்டு, அவள் முகத்தைப் பார்த்தான். ஆனால் அவள் அவனைப் பார்க்கவே இல்லை.

கனகம் சட்டென்று திரும்பிப் பார்த்தாள். மாப்பிள்ளை முகத்தில் அழகைக் கண்டு அனுபவித்த வெறியும், ஆசையும் தாண்டவமாடின. ஏக்கத்துடன் கனகத்தைப் பார்த்தான்.

அவள் உடனே ஜன்னலை விட்டு எழுந்து நகர்ந்து, 'என்னை இப்பொழுது ஏன் பார்க்கிறாய்? அன்றே, கலியாணமாகுமுன் பார்த் திருந்தால் பிரயோஜனமுண்டு. அன்று பார்த்து ஆசை காட்டியிருந்தால் நானும் முக மலர்ந்து நிற்பேன். இன்று உன் மனைவி முகத்தைப் பார்க்க வேண்டியவன் எதற்காக என்னைப் பார்க்கிறாய்?' என்று மனதில் எண்ணிக்கொண்டு கீழே இறங்கினாள். முன் கூடத்தில் அவள் தகப்பனாருடன் எதிர்த்த சிறகில் இரண்டு வீடு போட்டு மூன்றாம் வீட்டில் டாக்டர் ஆர். ராமஸ்வாமி, எம்.பி.பி.எஸ்., என்ற போர்டு போட்டுக்கொண்டு குடியிருந்தவர் உட்கார்ந்திருந்தார்.

கனகம் சற்று கலவரம் அடைந்து ஒரு நிமிஷம் அப்படியே நின்று அவர் முகத்தைப் பார்த்தாள். அதிலும் அழகைக் கண்ட வெறியும், ஆசையும் பிரதிபலித்து நின்றன; ஆனால் இப்பொழுது ஏனோ அவளுக்கு வெறுப்பு தோன்றவில்லை. அவளை அறியாமல் அவள் முகத்தில் ஒரு மகிழ்ச்சி படர்ந்தது.

'கனகம், வாம்மா! மாடியில் படித்துக் கொண்டிருந்தாயா?' என்றார் அவள் தகப்பனார். அவள் தாயார் சற்று தூரத்திலிருந்து ஆவலுடன் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

'நான் எதிர்பார்க்கவே இல்லை, டாக்டர்!'

'நானும் எதிர் பார்க்கவில்லை!'

'பின்...?'

'நேற்று யதேச்சையாக என் மாடியிலிருந்து இந்தப் பக்கம் பார்க்க நேர்ந்தது. உங்கள் பெண் ஜன்னலில் உட்கார்ந்திருந்ததைப் பார்த்தேன். பிறகு விசாரித்தேன்...'

'எவன் பிறந்திருக்கிறானோ?' என்று இவள் தாயார் அடிக்கடி சொல்லுவாள்...'

'நான்தான் பிறந்திருக்கிறேன்!' என்று ராமஸ்வாமி உத்சாகமாக கனகத்தைப் பார்த்தார்.

கனகம் அந்த இடத்திலேயே நிலைதெரியாமல் நின்றாள். கண்களில் நீர் மளமளவென்று வந்தது. ராமஸ்வாமி சடக்-என்று எழுந்து வந்து 'ஏனம்மா?' என்றார்.

இந்த வைத்தியத்தில் அவர் தேறவில்லையல்லவா இன்னும்?

•